சு-ம். வ்யாஸப்ரஸாதாச்ச்ருதவா நிமம் கு³ஹ்யமஹம் பரம் ।
யோக³ம் யோகே³ஶ்வராத்க்ருஷ்ணாத்ஸாக்ஷாத்கத²யத꞉ ஸ்வயம் ॥ (75)

ப-ம். 1 வ்யாஸப்ரஸாதாத் 12 ச்ருதவாந் 3 இமம் 5 கு³ஹ்யம் 2 அஹம் 4 பரம் 6 யோக³ம் 9 யோகே³ஶ்வராத் 10 க்ருஷ்ணாத் 11 ஸாக்ஷாத் 8 கத²யத꞉ 7 ஸ்வயம்.

(அ-ம்.) ஹே திருதாாஷ்டிரரே! ஸ்ரீ வியாசரது திருவருளானே யான் இப் பரமகுகிய யோகத்தைச் சாக்ஷாத் சுயமாகவே கூறுபவனுகியோகீசுரராகிய ஸ்ரீ கிருஷ்ணபகவானிடத்தினின்றும் நேரகவே கேட்டனன். (75)

(வி-ம்.) ஹே திருதாாஷ்டிரரே! ஸ்ரீ வியாசபகவான் எனக்கருளிய திவ்ய சக்ஷுசு சுரோத்திராதிகளே ஸ்ரீ வியாசபகவான் எனக்கருளிய பிரசாதமாகும். அதனுனே யான் இச்சம்வாதத்தைச் சாக்ஷாத்தெனது பரமேசுரரூபத்தானே கூறிக்கொண்டு சர்வ யோகிகட்கும் ஈசுரராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானிடத்தி னின்றும் நேரகவே சிரவணித்தனனேயலாது பரம்பரையாகச் சிரவணிக்க வில்லை. இத்துணை கூறியதானே சஞ்சயர் தமது மகாபாக்கியத்தைக் குறிப்பித் தருளினர். அச்சம்வாதம் குகியமாம்; அதாவது, சர்வ சாஸ்திர இரகசியரூபமாத லின் கண்டவர்கட்கெல்லாம் கொடுக்கத்தக்கனவல்லவாம். பரமாம்; அதாவது, மோக்ஷசாதனமாதலின் யாவினும் மேன்மையதாம். யோகமாம்; அதாவது, நிய மவாயிலாகச் சித்த நிரோதரூப யோகவேதுவாதலின் யோகரூபமாம்; அல்லது, ஞானயோகரூபமாம். ஈண்டொரு மூலப்புத்தகத்தின்கண்ணே 'ச்ருதவாநிமம்' என்னும் வசனத்தானத்தில் 'ச்ருதிவாநேதத்' என்பதாகவும் பாடமுளது அதுவும் நலமுடையதேயாம். (75)

(அ-கை.) இப்போது சஞ்சயர் அச்சம்வாத ஸ்மரணத்தாலுண்டாய தமது மகிழ்ச்சியைக்கூறுகின்ருர் :—

சு-ம். ராஜந் ஸம்ஸ்ம்ருத்ய ஸம்ஸ்ம்ருத்ய ஸம்வாத³மிமமத்³பு⁴தம் ।
கேஶவார்ஜுநயோ꞉ புண்யம் ஹ்ருஷ்யாமி ச முஹுர்முஹு꞉ ॥ (76)

ப-ம். 1 ராஜந் 7 ஸம்ஸ்ம்ருத்ய 8 ஸம்ஸ்ம்ருத்ய 6 ஸம்வாத³ம் 3 இமம் 4 அத்³பு⁴தம் 2 கேஶவார்ஜுநயோ꞉ 5 புண்யம் 10 ஹ்ருஷ்யாமி ச 9 முஹுர்முஹு꞉.

(அ-ம்.) ஹே திருதாாஷ்டிரரே! ஸ்ரீ கிருஷ்ணர்ச்சுனர்களுடைய இப்புண் ணியரூப அத்புத சம்வாதத்தை ஸ்மரித்து ஸ்மரித்து மகிழ்கின்றேன். (76)

(வி-ம்.) ஹே திருதாாஷ்டிரரே ஸ்ரீ கிருஷ்ணர்ச்சுனர்களுடைய இக்கீதா சாஸ்திரரூப சம்வாதம் அற்புதமாயது; அதாவது சித்தத்திற்கு விஸ்மயத்தை யடைவிப்பது. புண்ணியமாயது; அதாவது, கேவலம் சிரவணமாத்திரத்தானும் சர்வ பாவங்களேயும் நாசஞ்செய்வது. அத்தகைய அற்புத சம்வாதத்தையான் கேவலம் கேட்டன்மாத்திரமல்லேன்; மற்ருே கேட்ட அதை மீண்டு மீண்டும் நினைந்து மகிழ்ச்சியையுமடைகின்றேன். அல்லது, 'ஹ்ருஷ்யாமி' என்பதற் கிப் பொருள்கொள்க. அச்சம்வாதத்தை மீண்டும் மீண்டும் ஸ்மரித்து அடிக்கடி யெனது சரீரரோமங்களெழுகின்றன. கருத்திதுவாம்:—பூர்வ அநேகம் ஜன்மங் களில் என்ன புண்ணியம் செய்தேனே, என்ன தவஞ் செய்தேனே, என்னதானஞ்

செய்தேனே, எப்பகலியையானே ஸ்ரீ கிருஷ்ணபகவான் அர்ச்சுனர்களுடைய இச் சம்வாதரூப கீதா சாஸ்திரத்தையான் சிரவணிக்கப் பெற்றேனே அப்புண்ணியாதி யையறியேன். (76)

(அ-கை.) ஆண்டு ஸ்ரீ பகவானர்ச்சுனனுக்குத் தியானஞ்செய்யும்பொருட்டுத் தமது விசுவரூபமென்னும் சகுணவடிவத்தைக் காட்டியருளினர், அதை ஸ்மரித்துச் சஞ்சயர் திருதராஷ்டிரருக்குக் கூறுவதாவது :—

சு-ம். 𑌤𑌚𑍍𑌚 𑌸𑌂𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯 𑌸𑌂𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯 𑌰𑍂𑌪𑌮𑌤𑍍𑌯𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 𑌹𑌰𑍇𑌃 ।
𑌵𑌿𑌸𑍍𑌮𑌯𑍋 𑌮𑍇 𑌮𑌹𑌾𑌨𑍍𑌰𑌾𑌜𑌨𑍍 𑌹𑍃𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 𑌚 𑌪𑍁𑌨𑌃 𑌪𑍁𑌨𑌃 ॥ (77)

ப-ம். 4 𑌤𑌤𑍍 2 𑌚 7 𑌸𑌂𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯 8 𑌸𑌂𑌸𑍍𑌮𑍃𑌤𑍍𑌯 6 𑌰𑍂𑌪𑌂 5 𑌅𑌤𑍍𑌯𑌦𑍍𑌭𑍁𑌤𑌂 3 𑌹𑌰𑍇𑌃
11 𑌵𑌿𑌸𑍍𑌮𑌯𑌃 9 𑌮𑍇 10 𑌮𑌹𑌾𑌨𑍍 1 𑌰𑌾𑌜𑌨𑍍 14 𑌹𑍃𑌷𑍍𑌯𑌾𑌮𑌿 12 𑌚 13 𑌪𑍁𑌨𑌃𑌪𑍁𑌨𑌃.

(அ-ம்.) ஹே திருதராஷ்டிரரே! மீண்டும் கிருஷ்ணபகவானுடைய அதியற்புத விசுவரூபத்தை ஸ்மரித்து ஸ்மரித்து எனக்கு மகாவிஸ்மய முண்டாகின்றது; இதனுலே யான் மீண்டும் மீண்டும் மகிழ்கின்றேன். (77)

(வி-ம்.) ஹே திருதராஷ்டிரரே! ஸ்ரீ பகவான் அர்ச்சுனனுக்குத் தியானிப்பான் காட்டியருளிய தமது விசுவரூபமாகிய சகுணரூப அதியற்புதத்தை மீண்டு மீண்டும் எண்ணியெண்ணி எனக்கு மகா விஸ்மயமுண்டாகின்றது. இதனுலே யானடிக்கடி பேரானந்தக்கடலின் மூழ்குகின்றேன். (77)

(அ-கை.) ஹே திருதராஷ்டிரரே! நீர் உமது துரியோதனுதி மைந்தர் வெற்றிமுதலியவற்றை விழையாதொழித்துப் பாண்டவரோடு சமாதானஞ்செய்து கொள்ளுமென்றிப்போது சஞ்சயர் அவருக்குபதேசிக்கின்றார் :—

சு-ம். 𑌯𑌤𑍍𑌰 𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 𑌕𑍃𑌷𑍍𑌣𑍋 𑌯𑌤𑍍𑌰 𑌪𑌾𑌰𑍍𑌥𑍋 𑌧𑌨𑍁𑌰𑍍𑌧𑌰𑌃 ।
𑌤𑌤𑍍𑌰 𑌶𑍍𑌰𑍀𑌰𑍍𑌵𑌿𑌜𑌯𑍋 𑌭𑍂𑌤𑌿𑌰𑍍𑌧𑍍𑌰𑍁𑌵𑌾 𑌨𑍀𑌤𑌿𑌰𑍍𑌮𑌤𑌿𑌰𑍍𑌮𑌮 ॥ (78)

ப-ம். 1 𑌯𑌤𑍍𑌰 2 𑌯𑍋𑌗𑍇𑌶𑍍𑌵𑌰𑌃 3 𑌕𑍃𑌷𑍍𑌣𑌃 4 𑌯𑌤𑍍𑌰 6 𑌪𑌾𑌰𑍍𑌥𑌃 5 𑌧𑌨𑍁𑌰𑍍𑌧𑌰𑌃
7 𑌤𑌤𑍍𑌰 8 𑌶𑍍𑌰𑍀𑌃 9 𑌵𑌿𑌜𑌯𑌃 10 𑌭𑍂𑌤𑌿𑌃 12 𑌧𑍍𑌰𑍁𑌵𑌾 11 𑌨𑍀𑌤𑌿𑌃 14 𑌮𑌤𑌿𑌃 13 𑌮𑌮.

(அ-ம்.) ஹே திருதராஷ்டிரரே! எப்பக்கத்தில் யோகேசுரராகிய ஸ்ரீ கிருஷ்ண பகவானும், எப்பக்ஷத்தில் காண்டீவந்தாங்கிய அர்ச்சுனனுமிருக்கின்றனரோ அப்பக்கத்திற்றான் ஸ்ரீயும், விஜயமும், பூதியும், நீதியும் அவசியமுண்டாம் என்பதெனது துணிபாம். (78)

(வி-ம்.) ஹே திருதராஷ்டிரரே! எத்தருமபுத்திரர் பக்கத்தில் சர்வயோக சித்திகட்கு மீசுரராகிய சர்வஞ்ஞ சர்வசக்தி சம்பன்ன பக்தர்களின்றுக்கத்தை யழிக்கும் நாராயண நாமமுடைய ஸ்ரீ கிருஷ்ணபகவான் எழுந்தருளியிருக்கின்றாரோ, எத்தருமபுத்திரர் பக்கத்தில் காண்டீவமென்னும் தனுவைத்தரித்த நரநாமமுடைய அர்ச்சுனனிருக்கின்றானே; நரநாராயணுசரித அட்டக்ஷத்தில் ஸ்ரீ, விஜயம், பூதி, நீதியென்னும் நான்கும் ஒருதலையாயுண்டாம். இராஜ்ஜிய இலக்ஷ்மி ஸ்ரீயாம். சத்துருக்களின் பராஜய நிமித்தகமென்னமை விஜயமாம். உத்தரோத்தரம் இராஜ்ய இலக்ஷ்மியின் விருத்தி பூதியாம். நியாயம் நீதியெனப்படும். ஹே திருதராஷ்டிரரே! இ[illegible] ன்பயாபாதலின்,

உமது மைந்தருக்கு வெற்றியுண்டாமாசையைவிட்டு ஸ்ரீ பகவதனுக்கிரகம்பெற்ற இலக்ஷ்மி விஜயாதிகளோடுகூடிய தருமாதிபாண்டவர்களோடு சமாதானஞ் செய்துகொள்ளுவீராக. (78)

ஆ-சு. காஂ ஜத்ர்யாத்கஂ ஶாஸ்த்ரஂ மீதாவஸ்யஂ யெத நிஃஸ்ருதஂ ।
ஶ்ரத்தயா ஜஷஷேஷ தஷெஹ மவதெ நரஃ ॥ (1)
காருகூடி ஸஷோஷோஷா யஸ்யகஂ ஒருவாயதெ ।
மாணோ விவாகயா ஊதெரா யஸ்யஹஷா யதெஸதஃ ॥
தஹஂ வாஸாஷஂவஂ ஷெஉவிஷ்யா ஷோஷஹரஂ வரஂ ॥ (2)

ஸ்ரீமத் பரமஹம்ச பரிவிராஜகாசாரிய ஸ்ரீமத் உத்தவாநந்தகிரி சுவாமிகளின் பூஜ்யபாத சிஷ்யராகிய ஸ்ரீமத் சிற்கனனந்தகிரி சுவாமிகளியற்றிய பிராகிருதடீகையாகிய ஸ்ரீமத் பகவத்கீதைக் கூடார்த்ததீபிகை.

பதினெட்டாவது அத்தியாயம் முற்றிற்று.

ஸ்ரீ பகவற்கீதை யுரையுடன் முற்றிற்று.

சுபம்! சுபம்!! சுபம்!!!

---

## வாழ்த்து.

சித்திமா முகனும்வீர சேகரச் செல்வனே நின்
சத்தியவருளினனே தனஞ்சயற் கரிமுன் சாற்றும்
புத்தமு தெனுமிக்கீதை பொலிவுறத் தமிழில் வைத்தேன்
வித்தக விளங்குவானின் விரைமலர்க் கழல்கள் போற்றி.



PRINTED AT THE MADRAS TIMES PRINTING AND PUBLISHING CO., LTD.

